| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | புலன் தந்தவனுக்கு உண்மையாக இருந்தால் உயர்வான வாழ்வு வாழலாம்.<br><br>English Couplet 6:<br><br>Long live they blest, who 've stood in path from falsehood freed;<br>His, 'Who quenched lusts that from the sense-gates five proceed'<br><br>Couplet Explanation:<br><br>Those shall long proposer who abide in the faultless way of Him who has destroyed the five desires of the senses | wrath of God abideth on him.<br>குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் நித்தியஜீவனை உடையவனாயிருக்கிறான்; குமாரனை விசுவாசியாதவனோ ஜீவனைக் காண்பதில்லை, தேவனுடைய கோபம் அவன்மேல் நிலைநிற்கும் என்றான்.<br><br>**(John 4:14 [KJV])**<br>But whosoever drinketh of the water that I shall give him shall never thirst; but the water that I shall give him shall be in him a well of water springing up into everlasting life.<br>நான் கொடுக்கும் தண்ணீரைக் குடிக்கிறவனுக்கோ ஒருக்காலும் தாகமுண்டாகாது; நான் அவனுக்குக் கொடுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே நித்திய ஜீவகாலமாய் ஊறுகிற நீரூற்றாயிருக்கும் என்றார். |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | **(John 5:24 [KJV])**<br>Verily, verily, I say unto you, He that heareth my word, and believeth on him that sent me, hath everlasting life, and shall not come into condemnation; but is passed from death unto life.<br>என் வசனத்தைக் கேட்டு, என்னை அனுப்பினவரை விசுவாசிக்கிறவனுக்கு நித்தியஜீவன் உண்டு; அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்படாமல், மரணத்தைவிட்டு நீங்கி, ஜீவனுக்குட்பட்டிருக்கிறான் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.<br><br>**(John 6:40 [KJV])**<br>And this is the will of him that sent me, that every one which seeth the Son, and believeth on him, may have everlasting life: and I will raise him up at the last day.<br>குமாரனைக் கண்டு, அவரிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ, அவன் நித்தியஜீவனை அடைவதும், |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | நான் அவனைக் கடைசிநாளில் எழுப்புவதும், என்னை அனுப்பினவருடைய சித்தமாயிருக்கிறது என்றார்.<br><br>(John 6:47 [KJV])<br>Verily, verily, I say unto you, He that believeth on me hath everlasting life.<br>என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனுக்கு நித்தியஜீவன் உண்டென்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.<br><br>(Jas 1:14-15 [KJV])<br>But every man is tempted, when he is drawn away of his own lust, and enticed. 15 Then when lust hath conceived, it bringeth forth sin: and sin, when it is finished, bringeth forth death.<br>**14** அவனவன் தன்தன் சுய இச்சையினாலே இழுக்கப்பட்டு, சிக்குண்டு, சோதிக்கப்படுகிறான்.<br>**15** பின்பு இச்சையானது |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
| --- | --- | --- |
| | | கர்ப்பந்தரித்து, பாவத்தைப் பிறப்பிக்கும், பாவம் பூரணமாகும்போது, மரணத்தைப் பிறப்பிக்கும்.<br><br>**(Ps 7:14 [KJV])**<br>Behold, he travaileth with iniquity, and hath conceived mischief, and brought forth falsehood.<br>இதோ, அவன் அக்கிரமத்தைப் பெறக் கர்ப்பவேதனைப்படுகிறான்; தீவினையைக் கர்ப்பந்தரித்து, பொய்யைப் பெறுகிறான்.<br><br>**(Gal 5:16 [KJV])**<br>*This* I say then, Walk in the Spirit, and ye shall not fulfil the lust of the flesh.<br>பின்னும் நான் சொல்லுகிறதென்னவென்றால், ஆவிக்கேற்றபடி நடந்துகொள்ளுங்கள், அப்பொழுது மாம்ச இச்சையை நிறைவேற்றாதிருப்பீர்கள்.<br><br>**(1Thess 4:5 [KJV])**<br>Not in the lust of concupiscence, even as the Gentiles which know not |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | God:<br>உங்களில் அவனவன் தன்தன் சரீர பாண்டத்தைப் பரிசுத்தமாயும் கனமாயும் ஆண்டுகொள்ளும்படி அறிந்து:<br><br>**(Rom 6:16 [KJV])**<br>Know ye not, that to whom ye yield yourselves servants to obey, his servants ye are to whom ye obey; whether of sin unto death, or of obedience unto righteousness?<br>மரணத்துக்கேதுவான பாவத்துக்கானாலும், நீதிக்கேதுவான கீழ்ப்படிதலுக்கானாலும், எதற்குக் கீழ்ப்படியும்படி உங்களை அடிமைகளாக ஒப்புக்கொடுக்கிறீர்களோ, அதற்கே கீழ்ப்படிகிற அடிமைகளாயிருக்கிறீர்களென்று அறியீர்களா?<br><br>**(Rom 6:18 [KJV])**<br>Being then made free from sin, ye became the servants of righteousness.<br>பாவத்தினின்று நீங்கள் விடுதலையாக்கப்பட்டு, |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | நீதிக்கு அடிமைகளானீர்கள்.<br><br>**(Rom 6:14 [KJV])**<br>For sin shall not have dominion over you: for ye are not under the law, but under grace.<br>நீங்கள் நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்பட்டிராமல் கிருபைக்குக் கீழ்ப்பட்டிருக்கிறபடியால், பாவம் உங்களை மேற்கொள்ளமாட்டாது.<br><br>**(John 8:32 [KJV])**<br>And ye shall know the truth, and the truth shall make you free.<br>சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் என்றார்.<br>**(John 8:36 [KJV])**<br>If the Son therefore shall make you free, ye shall be free indeed.<br>ஆகையால் குமாரன் உங்களை விடுதலையாக்கினால் மெய்யாகவே விடுதலையாவீர்கள். |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | **(John 14:6 [KJV])**<br>Jesus saith unto him, I am the way, the truth, and the life: no man cometh unto the Father, but by me.<br>**(John 14:6 [தமிழ்])**<br>அதற்கு இயேசு: நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்.<br><br>**(1Cor 7:22 [KJV])**<br>For he that is called in the Lord, *being* a servant, is the Lord's freeman: likewise also he that is called, *being* free, is Christ's servant.<br>கர்த்தருக்குள் அழைக்கப்பட்ட அடிமையானவன் கர்த்தருடைய சுயாதீனனாயிருக்கிறான்; அப்படியே அழைக்கப்பட்ட சுயாதீனன் கிறிஸ்துவினுடைய அடிமையாயிருக்கிறான்.<br><br>**(Gal 5:1 [KJV])**<br>Stand fast therefore in the |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | liberty wherewith Christ hath made us free, and be not entangled again with the yoke of bondage.<br>ஆனபடியினாலே, நீங்கள் மறுபடியும் அடிமைத்தனத்தின் நுகத்துக்குட்படாமல், கிறிஸ்து நமக்கு உண்டாக்கின சுயாதீன நிலைமையிலே நிலைகொண்டிருங்கள்.<br><br>**(1Pet 2:16 [KJV])**<br>As free, and not using *your* liberty for a cloke of maliciousness, but as the servants of God.<br>சுயாதீனமுள்ளவர்களாயிருந்தும் உங்கள் சுயாதீனத்தைத் துர்க்குணத்திற்கு மூடலாகக் கொண்டிராமல், தேவனுக்கு அடிமைகளாயிருங்கள்.<br><br>**(Rom 4:7-8 [KJV])**<br>*Saying*, Blessed *are* they whose iniquities are forgiven, and whose sins are covered. 8 Blessed *is* the man to whom the Lord will not impute sin.<br>**7** எவர்களுடைய |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | அக்கிரமங்கள் மன்னிக்கப்பட்டதோ, எவர்களுடைய பாவங்கள் மூடப்பட்டதோ, அவர்கள் பாக்கியவான்கள்.<br>**8** எவனுடைய பாவத்தைக் கர்த்தர் எண்ணாதிருக்கிறாரோ, அவன் பாக்கியவான் என்று தாவீது சொல்லியிருக்கிறான்.<br><br>**(Jer 17:7 [KJV])**<br>Blessed *is* the man that trusteth in the LORD, and whose hope the LORD is.<br>கர்த்தர்மேல் நம்பிக்கைவைத்து, கர்த்தரைத் தன் நம்பிக்கையாகக் கொண்டிருக்கிற மனுஷன் பாக்கியவான். |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| 7 | **குறள் 7:**<br><br>**தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால் மனக்கவலை மாற்றல் அரிது.**<br><br>மு.வரதராசன் விளக்கம்:<br><br>தனக்கு ஒப்புமை இல்லாத தலைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர் அல்லாமல், மற்றவர்க்கு மனக்கவலையை மாற்ற முடியாது.<br><br>சாலமன் பாப்பையா விளக்கம்:<br><br>தனக்கு இணையில்லாத கடவுளின் திருவடிகளைச் சேர்ந்தவர்க்கே அன்றி, மற்றவர்களுக்கு மனக்கவலையைப் போக்குவது கடினம்.<br><br>சிவயோகி சிவக்குமார் விளக்கம்:<br><br>நிகரற்றவனின் நிழல் | **(Isa 9:6 [KJV])**<br>For unto us a child is born, unto us a son is given: and the government shall be upon his shoulder: and his name shall be called Wonderful, Counsellor, The mighty God, The everlasting Father, The Prince of Peace.<br>நமக்கு ஒரு பாலகன் பிறந்தார்; நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார்; கர்த்தத்துவம் அவர் தோளின்மேலிருக்கும்; அவர் நாமம் அதிசயமானவர், ஆலோசனைக்கர்த்தா, வல்லமையுள்ள தேவன், நித்திய பிதா, சமாதானப்பிரபு என்னப்படும்.<br><br>**(John 14:27 [KJV])**<br>Peace I leave with you, my peace I give unto you: not as the world giveth, give I unto you. Let not your heart be troubled, neither let it be afraid.<br>சமாதானத்தை உங்களுக்கு வைத்துப்போகிறேன், என்னுடைய சமாதானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன்; உலகம் |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | அடைந்தாள் இன்றி மனக்கவலைகள் மாறுவது இயலாது.<br><br>English Couplet 7:<br><br>Unless His foot, 'to Whom none can compare,' men gain,<br>'Tis hard for mind to find relief from anxious pain | கொடுக்கிறபிரகாரம் நான் உங்களுக்குக் கொடுக்கிறதில்லை. உங்கள் இருதயம் கலங்காமலும் பயப்படாமலும் இருப்பதாக.<br><br>**(John 16:33 [KJV])**<br>These things I have spoken unto you, that in me ye might have peace. In the world ye shall have tribulation: but be of good cheer; I have overcome the world.<br>என்னிடத்தில் உங்களுக்குச் சமாதானம் உண்டாயிருக்கும்பொருட்டு இவைகளை உங்களுக்குச் சொன்னேன். உலகத்தில் உங்களுக்கு உபத்திரவம் உண்டு, ஆனாலும் திடன்கொள்ளுங்கள்; நான் உலகத்தை ஜெயித்தேன் என்றார்.<br><br>**(Matt 11:28-30 [KJV])**<br>Come unto me, all *ye* that labour and are heavy laden, and I will give you rest. 29 Take my yoke upon you, and learn of me; for I am meek and lowly in heart: and ye |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | Couplet Explanation:<br><br>Anxiety of mind cannot be removed, except from those who are united to the feet of Him who is incomparable | shall find rest unto your souls. 30 For my yoke *is* easy, and my burden is light.<br>**28** வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே! நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்.<br>**29** நான் சாந்தமும் மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன்; என் நுகத்தை உங்கள்மேல் ஏற்றுக்கொண்டு, என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; அப்பொழுது, உங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும்.<br>**30** என் நுகம் மெதுவாயும், என் சுமை இலகுவாயும் இருக்கிறது என்றார்.<br><br>**(Isa 40:31 [KJV])**<br>But they that wait upon the LORD shall renew *their* strength; they shall mount up with wings as eagles; they shall run, and not be weary; *and* they shall walk, and not faint.<br>கர்த்தருக்குக் |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | காத்திருக்கிறவர்களோ புதுப்பெலன் அடைந்து, கழுகுகளைப்போலச் செட்டைகளை அடித்து எழும்புவார்கள்; அவர்கள் ஓடினாலும் இளைப்படையார்கள், நடந்தாலும் சோர்ந்துபோகார்கள்.<br><br>**(Rom 16:20 [KJV])**<br>And the God of peace shall bruise Satan under your feet shortly. The grace of our Lord Jesus Christ *be* with you. Amen.<br>சமாதானத்தின் தேவன் சீக்கிரமாய்ச் சாத்தானை உங்கள் கால்களின்கீழே நசுக்கிப்போடுவார். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய கிருபை உங்களுடனேகூட இருப்பதாக. ஆமென்.<br><br>**(Eph 1:2 [KJV])**<br>Grace *be* to you, and peace, from God our Father, and *from* the Lord Jesus Christ.<br>நம்முடைய பிதாவாகிய தேவனாலும், கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினாலும், உங்களுக்குக் கிருபையும் |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | சமாதானமும் உண்டாவதாக.<br><br>**(Luke 7:44-50 [KJV])**<br>And he turned to the woman, and said unto Simon, Seest thou this woman? I entered into thine house, thou gavest me no water for my feet: **but she hath washed my feet with tears, and wiped *them* with the hairs of her head.** 45 Thou gavest me no kiss: **but this woman since the time I came in hath not ceased to kiss my feet**. 46 My head with oil thou didst not anoint: **but this woman hath anointed my feet with ointment.** 47 Wherefore I say unto thee, Her sins, which are many, are forgiven; for she loved much: but to whom little is forgiven, *the same* loveth little. 48 **And he said unto her, Thy sins are forgiven.** 49 And they that sat at meat with him began to say within themselves, **Who is this that forgiveth sins also?** 50 And he said to the woman, Thy faith hath |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | saved thee; go in peace.<br>**44** ஸ்திரீயினிடமாய்த்<br>திரும்பி, சீமோனை நோக்கி:<br>இந்த ஸ்திரீயைப்<br>பார்க்கிறாயே; நான் உன்<br>வீட்டில் பிரவேசித்தேன், நீ<br>என் கால்களுக்குத் தண்ணீர்<br>தரவில்லை, இவளோ,<br>கண்ணீரினால் என் கால்களை<br>நனைத்து, தன்<br>தலைமயிரினால்<br>அவைகளைத் துடைத்தாள்.<br>**45** நீ என்னை<br>முத்தஞ்செய்யவில்லை,<br>இவளோ, நான்<br>உட்பிரவேசித்தது முதல், என்<br>பாதங்களை ஓயாமல்<br>முத்தஞ்செய்தாள். **46** நீ என்<br>தலையில் எண்ணெய்<br>பூசவில்லை, இவளோ, என்<br>பாதங்களில் பரிமளதைலம்<br>பூசினாள். **47** ஆதலால் நான்<br>உனக்குச் சொல்லுகிறேன்:<br>இவள் செய்த அநேக<br>பாவங்கள்<br>மன்னிக்கப்பட்டது; இவள்<br>மிகவும் அன்புகூர்ந்தாளே.<br>எவனுக்குக் கொஞ்சம்<br>மன்னிக்கப்படுகிறதோ,<br>அவன் கொஞ்சமாய்<br>அன்புகூருவான் என்று<br>சொல்லி; **48** அவளை |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | நோக்கி: உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்றார்.<br>49 அப்பொழுது கூடப் பந்தியிருந்தவர்கள்: பாவங்களை மன்னிக்கிற இவன் யார் என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.<br>50 அவர் ஸ்திரீயை நோக்கி: உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ என்றார்.<br><br>**(Luke 5:20-24 [KJV])**<br>And when he saw their faith, he said unto him, Man, thy sins are forgiven thee. 21 And the scribes and the Pharisees began to reason, saying, Who is this which speaketh blasphemies? Who can forgive sins, but God alone? 22 But when Jesus perceived their thoughts, he answering said unto them, What reason ye in your hearts? 23 Whether is easier, to say, Thy sins be forgiven thee; or to say, Rise up and walk? 24 But that ye may know that the Son of man |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | hath power upon earth to forgive sins, (he said unto the sick of the palsy,) I say unto thee, Arise, and take up thy couch, and go into thine house.<br>20 அவர்களுடைய விசுவாசத்தை அவர் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மனுஷனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார்.<br>21 அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும் யோசனைபண்ணி, தேவதூஷணம் சொல்லுகிற இவன் யார்? தேவன் ஒருவரேயன்றிப் பாவங்களை மன்னிக்கத்தக்கவர் யார் என்றார்கள்.<br>22 இயேசு அவர்கள் சிந்தனைகளை அறிந்து, அவர்களை நோக்கி: உங்கள் இருதயங்களில் நீங்கள் சிந்திக்கிறதென்ன?<br>23 உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்று சொல்வதோ, எழுந்து நடவென்று சொல்வதோ, எது எளிது?<br>24 பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறியவேண்டும் |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | என்று சொல்லி, திமிர்வாதக்காரனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| 8 | **குறள் 8:**<br><br>***அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால் பிறவாழி நீந்தல் அரிது.***<br><br>மு.வரதராசன் விளக்கம்:<br><br>அறக்கடலாக விளங்கும் கடவுளின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர் அல்லாமல், மற்றவர் பொருளும் இன்பமுமாகிய மற்ற கடல்களைக் கடக்க முடியாது.<br><br>சாலமன் பாப்பையா விளக்கம்:<br><br>அறக்கடலான கடவுளின் திருவடிகளை சேர்ந்தவரே அல்லாமல் மற்றவர் பிறவியாக கடலை நீந்திக் கடப்பது கடினம்.<br><br>சிவயோகி சிவக்குமார் விளக்கம்:<br><br>முடிவை புரிந்துகொண்ட இயல்பானவன் நிழல் | **(John 8:21 [KJV])**<br>Then said Jesus again unto them, I go my way, and ye shall seek me, and shall die in your sins: whither I go, ye cannot come.<br>இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி: நான் போகிறேன், நீங்கள் என்னைத் தேடி உங்கள் பாவங்களிலே சாவீர்கள்; நான் போகிற இடத்துக்கு வர உங்களால் கூடாது என்றார்.<br><br>**(John 8:24 [KJV])**<br>**I said therefore unto you, that ye shall die in your sins: for if ye believe not that I am *he*, ye shall die in your sins.**<br>ஆகையால் நீங்கள் உங்கள் பாவங்களில் சாவீர்கள் என்று உங்களுக்குச் சொன்னேன்; நானே அவர் என்று நீங்கள் விசுவாசியாவிட்டால் உங்கள் பாவங்களிலே சாவீர்கள் என்றார்.<br><br>**(John 3:18 [KJV])**<br>He that believeth on him is not condemned: but he that believeth not is condemned already, because he hath not |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | அடையாவிட்டால் பிறவி அறுப்பது கடினம்.<br><br>English Couplet 8:<br><br>Unless His feet 'the Sea of Good, the Fair and Bountiful,' men gain,<br>'Tis hard the further bank of being's changeful sea to attain<br><br>Couplet Explanation:<br><br>None can swim the sea of vice, but those who are united to the feet of that gracious Being who is a sea of virtue | believed in the name of the only begotten Son of God.<br>அவரை விசுவாசிக்கிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படான்; விசுவாசியாதவனோ, தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று.<br><br>**(John 3:36 [KJV])**<br>He that believeth on the Son hath everlasting life: and he that believeth not the Son shall not see life; but the wrath of God abideth on him.<br>குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் நித்தியஜீவனை உடையவனாயிருக்கிறான்; குமாரனை விசுவாசியாதவனோ ஜீவனைக் காண்பதில்லை, தேவனுடைய கோபம் அவன்மேல் நிலைநிற்கும் என்றான்.<br><br>**(Mark 16:16 [KJV])** |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | He that believeth and is baptized shall be saved; but he that believeth not shall be damned.<br>விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்; விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்.<br><br>**(Prov 8:36 [KJV])**<br>But he that sinneth against me wrongeth his own soul: all they that hate me love death.<br>எனக்கு விரோதமாகப் பாவஞ்செய்கிறவனோ, தன் ஆத்துமாவைச் சேதப்படுத்துகிறான்; என்னை வெறுக்கிறவர்கள் யாவரும் மரணத்தை விரும்புகிறவர்கள் என்று சொல்லுகிறது.<br><br>**(Acts 4:12 [KJV])**<br>Neither is there salvation in any other: for there is none other name under heaven given among men, whereby we must be saved.<br>அவராலேயன்றி |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழெங்கும், மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை என்றான்.<br><br>**(Acts 10:43 [KJV])**<br>To him give all the prophets witness, that through his name whosoever believeth in him shall receive remission of sins.<br>அவரை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் அவருடைய நாமத்தினாலே பாவமன்னிப்பைப் பெறுவானென்று தீர்க்கதரிசிகளெல்லாரும் அவரைக்குறித்தே சாட்சிகொடுக்கிறார்கள் என்றான்.<br><br>**(Matt 1:21 [KJV])**<br>And she shall bring forth a son, and thou shalt call his name JESUS: for he shall save his people from their |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | sins.<br>அவள் ஒரு குமாரனைப் பெறுவாள், அவருக்கு இயேசு என்று பேரிடுவாயாக; ஏனெனில் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார் என்றான்.<br><br>**(Heb 12:25 [KJV])**<br>See that ye refuse not him that speaketh. For if they escaped not who refused him that spake on earth, much more *shall not* we *escape*, if we turn away from him that *speaketh* from heaven:<br>பேசுகிறவருக்கு நீங்கள் செவிகொடுக்கமாட்டோமென்று விலகாதபடி எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெனில், பூமியிலே பேசினவருக்குச் செவிகொடுக்கமாட்டோமென்று விலகினவர்கள் தப்பிப்போகாமலிருக்க, பரலோகத்திலிருந்து பேசுகிறவரை நாம் விட்டுவிலகினால் எப்படித் தப்பிப்போவோம்? |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| 9 | **குறள் 9:**<br><br>**கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை.**<br><br>மு.வரதராசன் விளக்கம்:<br><br>கேட்காதசெவி, பார்க்காத கண் போன்ற எண் குணங்களை உடைய கடவுளின் திருவடிகளை வணங்காதவரின் தலைகள் பயனற்றவைகளாம்.<br><br>சாலமன் பாப்பையா விளக்கம்:<br><br>எண்ணும் நல்ல குணங்களுக்கு எல்லாம் இருப்பிடமான கடவுளின் திருவடிகளை வணங்காத தலைகள், புலன்கள் இல்லாத பொறிகள்போல, இருந்தும் பயன் இல்லாதவையே.<br><br>சிவயோகி சிவக்குமார் விளக்கம்:<br><br>கோள்களிலோ | **(John 15:22-24 [KJV])**<br>If I had not come and spoken unto them, they had not had sin: but now they have no cloke for their sin. 23 He that hateth me hateth my Father also. 24 If I had not done among them the works which none other man did, they had not had sin: but now have they both seen and hated both me and my Father.<br>**22** நான் வந்து அவர்களிடத்தில் பேசாதிருந்தேனானால் அவர்களுக்குப் பாவமிராது; இப்பொழுதோ தங்கள் பாவத்தைக்குறித்துப் போக்குச்சொல்ல அவர்களுக்கு இடமில்லை.<br>**23** என்னைப் பகைக்கிறவன் என் பிதாவையும் பகைக்கிறான்.<br>**24** வேறொருவரும் செய்யாத கிரியைகளை நான் அவர்களுக்குள்ளே செய்யாதிருந்தேனானால், அவர்களுக்குப் பாவமிராது; இப்பொழுது அவர்கள் என்னையும் என் பிதாவையும் கண்டும் |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | பொறிகளிலோ குணம் என்பது இல்லை,என் குணம் கொண்டவனை வணக்குவதே தலை.<br><br>English Couplet 9:<br><br>Before His foot, 'the Eight-fold Excellence,' with unbent head,<br>Who stands, like palsied sense, is to all living functions dead<br><br>Couplet Explanation:<br><br>The head that worships not the feet of Him who is possessed of eight attributes, is as useless as a sense without the power of sensation | பகைத்துமிருக்கிறார்கள்.<br><br>**(John 12:48 [KJV])**<br>He that rejecteth me, and receiveth not my words, hath one that judgeth him: the word that I have spoken, the same shall judge him in the last day.<br>என்னைத் தள்ளி என் வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாதவனை நியாயந்தீர்க்கிறதொன்றிருக்கிறது; நான் சொன்ன வசனமே அவனைக் கடைசிநாளில் நியாயந்தீர்க்கும்.<br><br>**(Luke 9:26 [KJV])**<br>For whosoever shall be ashamed of me and of my words, of him shall the Son of man be ashamed, when he shall come in his own glory, and *in his* Father's, and of the holy angels.<br>என்னைக்குறித்தும் என் வார்த்தைகளைக்குறித்தும் எவன் வெட்கப்படுகிறானோ, அவனைக்குறித்து மனுஷகுமாரனும் |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | தம்முடைய மகிமையோடும் பிதாவின் மகிமையோடும் பரிசுத்த தூதர்களின் மகிமையோடும் வரும்போது வெட்கப்படுவார்.<br><br>**(Luke 10:16 [KJV])**<br>He that heareth you heareth me; and he that despiseth you despiseth me; and he that despiseth me despiseth him that sent me.<br>சீஷரை நோக்கி: உங்களுக்குச் செவிகொடுக்கிறவன் எனக்குச் செவிகொடுக்கிறான், உங்களை அசட்டைபண்ணுகிறவன் என்னை அசட்டைபண்ணுகிறான், என்னை அசட்டைபண்ணுகிறவன் என்னை அனுப்பினவரை அசட்டைபண்ணுகிறான் என்றார்.<br><br>**(John 3:18-20 [KJV])**<br>He that believeth on him is not condemned: but he that believeth not is condemned already, because he hath not believed in the name of the |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | only begotten Son of God.<br>19 And this is the<br>condemnation, that light is<br>come into the world, and<br>men loved darkness rather<br>than light, because their<br>deeds were evil. 20 For<br>every one that doeth evil<br>hateth the light, neither<br>cometh to the light, lest his<br>deeds should be reproved.<br>**18** அவரை<br>விசுவாசிக்கிறவன்<br>ஆக்கினைக்குள்ளாகத்<br>தீர்க்கப்படான்;<br>விசுவாசியாதவனோ,<br>தேவனுடைய ஒரேபேறான<br>குமாரனுடைய நாமத்தில்<br>விசுவாசமுள்ளவனாயிராதப<br>டியினால், அவன்<br>ஆக்கினைத்<br>தீர்ப்புக்குட்பட்டாயிற்று.<br>**19** ஒளியானது உலகத்திலே<br>வந்திருந்தும் மனுஷருடைய<br>கிரியைகள்<br>பொல்லாதவைகளாயிருக்கிற<br>படியினால் அவர்கள்<br>ஒளியைப்பார்க்கிலும்<br>இருளை விரும்புகிறதே<br>அந்த ஆக்கினைத்தீர்ப்புக்குக்<br>காரணமாயிருக்கிறது.<br>**20** பொல்லாங்கு செய்கிற |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | எவனும் ஒளியைப் பகைக்கிறான், தன் கிரியைகள் கண்டிக்கப்படாதபடிக்கு, ஒளியினிடத்தில் வராதிருக்கிறான்.<br><br>**(2Thess 2:10 [KJV])**<br>And with all deceivableness of unrighteousness in them that perish; because they received not the love of the truth, that they might be saved.<br>கெட்டுப்போகிறவர்களுக்குள்ளே அநீதியினால் உண்டாகும் சகலவித வஞ்சகத்தோடும் இருக்கும். இரட்சிக்கப்படத்தக்கதாய்ச் சத்தியத்தின்மேலுள்ள அன்பை அவர்கள் அங்கிகரியாமற்போனபடியால் அப்படி நடக்கும்.<br><br>**(Isa 45:23 [KJV])**<br>I have sworn by myself, the word is gone out of my mouth *in* righteousness, and shall not return, That unto me every knee shall bow, every tongue shall swear.<br>முழங்கால் யாவும் எனக்கு |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | முன்பாக முடங்கும், நாவு யாவும் என்னை முன்னிட்டு ஆணையிடும் என்று நான் என்னைக்கொண்டே ஆணையிட்டிருக்கிறேன்; இந்த நீதியான வார்த்தை என் வாயிலிருந்து புறப்பட்டது; இது மாறுவது இல்லையென்கிறார்.<br><br>**(Phil 2:10 [KJV])**<br>That at the name of Jesus **every knee should bow**, of *things* in heaven, and *things* in earth, and *things* under the earth;<br>இயேசுவின் நாமத்தில் வானோர் பூதலத்தோர் பூமியின் கீழானோருடைய முழங்கால் யாவும் முடங்கும்படிக்கும், |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| 10 | **குறள் 10:**<br><br>**பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**<br>**இறைவன் அடிசேரா தார்.**<br><br>மு.வரதராசன் விளக்கம்:<br><br>இறைவனுடைய திருவடிகளை பொருந்தி நினைக்கின்றவர் பிறவியாகிய பெரிய கடலைக் கடக்க முடியும். மற்றவர் கடக்க முடியாது.<br><br>சாலமன் பாப்பையா விளக்கம்:<br><br>கடவுளின் திருவடிகளைச் சேர்ந்தவர் பிறவியாகிய பெருங்கடலை நீந்திக் கடப்பர்; மற்றவர் நீந்தவும் மாட்டார்.<br><br>சிவயோகி சிவக்குமார் விளக்கம்:<br><br>இறைவன் அடி சார்ந்தால் பிறவி கடலை நீந்தலாம்.இல்லையேல் | **(1John 1:7 [KJV])**<br>But if we walk in the light, as he is in the light, we have fellowship one with another, and the blood of Jesus Christ his Son cleanseth us from all sin.<br>அவர் ஒளியிலிருக்கிறதுபோல நாமும் ஒளியிலே நடந்தால் ஒருவரோடொருவர் ஐக்கியப்பட்டிருப்போம்; அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி, நம்மைச் சுத்திகரிக்கும்.<br><br>**(1John 2:2 [KJV])**<br>And he is the propitiation for our sins: and not for ours only, but also for *the sins of* the whole world.<br>நம்முடைய பாவங்களை நிவிர்த்தி செய்கிற கிருபாதாரபலி அவரே; நம்முடைய பாவங்களை மாத்திரம் அல்ல, சர்வலோகத்தின் பாவங்களையும் நிவிர்த்தி செய்கிற பலியாயிருக்கிறார்.<br><br>**(John 6:51-57 [KJV])** |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | நீந்தமுடியது.<br><br>English Couplet 10:<br><br>They swim the sea of births, the 'Monarch's' foot who gain;<br>None others reach the shore of being's mighty main<br><br>Couplet Explanation:<br><br>None can swim the great sea of births but those who are united to the feet of God | I am the living bread which came down from heaven: if any man eat of this bread, he shall live for ever: **and the bread that I will give is my flesh, which I will give for the life of the world.** 52 The Jews therefore strove among themselves, saying, How can this man give us *his* flesh to eat? 53 Then Jesus said unto them, Verily, verily, I say unto you, Except ye eat the flesh of the Son of man, and drink his blood, ye have no life in you. 54 **Whoso eateth my flesh, and drinketh my blood, hath eternal life; and I will raise him up at the last day.** 55 For my flesh is meat indeed, and my blood is drink indeed. 56 **He that eateth my flesh, and drinketh my blood, dwelleth in me, and I in him.** 57 As the living Father hath sent me, and I live by the Father: **so he that eateth me, even he shall live by me.**<br>**51** நானே வானத்திலிருந்திறங்கின ஜீவ |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | அப்பம்; இந்த அப்பத்தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான்; நான் கொடுக்கும் அப்பம் உலகத்தின் ஜீவனுக்காக நான் கொடுக்கும் என் மாம்சமே என்றார்.<br>52 அப்பொழுது யூதர்கள்: இவன் தன்னுடைய மாம்சத்தை எப்படி நமக்குப் புசிக்கக் கொடுப்பான் என்று தங்களுக்குள்ளே வாக்குவாதம்பண்ணினார்கள்.<br>53 அதற்கு இயேசு அவர்களை நோக்கி: நீங்கள் மனுஷகுமாரனுடைய மாம்சத்தைப் புசியாமலும், அவருடைய இரத்தத்தைப் பானம்பண்ணாமலும் இருந்தால் உங்களுக்குள்ளே ஜீவனில்லை என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.<br>54 என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவனுக்கு நித்தியஜீவன் உண்டு; நான் அவனைக் கடைசிநாளில் எழுப்புவேன்.<br>55 என் மாம்சம் மெய்யான போஜனமாயிருக்கிறது, என் |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | இரத்தம் மெய்யான பானமாயிருக்கிறது. **56** என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவன் என்னிலே நிலைத்திருக்கிறான், நானும் அவனிலே நிலைத்திருக்கிறேன்.<br>**57** ஜீவனுள்ள பிதா என்னை அனுப்பினதுபோலவும், நான் பிதாவினால் பிழைத்திருக்கிறதுபோலவும், என்னைப் புசிக்கிறவனும் என்னாலே பிழைப்பான்.<br><br>**(John 6:40 [KJV])**<br>And this is the will of him that sent me, that every one which seeth the Son, and believeth on him, may have everlasting life: and I will raise him up at the last day.<br>குமாரனைக் கண்டு, அவரிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ, அவன் நித்தியஜீவனை அடைவதும், நான் அவனைக் கடைசிநாளில் எழுப்புவதும், என்னை அனுப்பினவருடைய |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | சித்தமாயிருக்கிறது என்றார்.<br><br>**(John 6:44 [KJV])**<br>No man can come to me, except the Father which hath sent me draw him: and I will raise him up at the last day.<br>என்னை அனுப்பின பிதா ஒருவனை இழுத்துக்கொள்ளாவிட்டால் அவன் என்னிடத்தில் வரமாட்டான்; கடைசிநாளில் நான் அவனை எழுப்புவேன்.<br><br>**(John 2:19 [KJV])**<br>Jesus answered and said unto them, Destroy this temple, and in three days I will raise it up.<br>இயேசு அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: இந்த ஆலயத்தை இடித்துப்போடுங்கள், மூன்று நாளைக்குள்ளே இதை எழுப்புவேன் என்றார்.<br><br>**(John 10:17-18 [KJV])**<br>Therefore doth my Father love me, because I lay down my life, that I might take it again. 18 No man taketh it from me, but I lay it down |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | of myself. I have power to lay it down, and I have power to take it again. This commandment have I received of my Father.<br>**17** நான் என் ஜீவனை மறுபடியும் அடைந்துகொள்ளும்படிக்கு அதைக் கொடுக்கிறபடியினால் பிதா என்னில் அன்பாயிருக்கிறார்.<br>**18** ஒருவனும் அதை என்னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளமாட்டான்; நானே அதைக் கொடுக்கிறேன், அதைக் கொடுக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் எடுத்துக்கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு. இந்தக் கட்டளையை என் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன் என்றார்.<br><br>**(John 11:25 [KJV])**<br>Jesus said unto her, I am the resurrection, and the life: he that believeth in me, though he were dead, yet shall he live: |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | இயேசு அவளை நோக்கி: நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன், என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான்;<br><br>**(Mark 8:31 [KJV])**<br>And he began to teach them, that the Son of man must suffer many things, and be rejected of the elders, and *of* the chief priests, and scribes, and be killed, and after three days rise again.<br>அல்லாமலும், மனுஷகுமாரன் பல பாடுகள்பட்டு, மூப்பராலும் பிரதான ஆசாரியராலும் வேதபாரகராலும் ஆகாதவனென்று தள்ளப்பட்டு, கொல்லப்பட்டு, மூன்றுநாளைக்குப்பின்பு உயிர்த்தெழுந்திருக்கவேண்டியதென்று அவர்களுக்குப் போதிக்கத் தொடங்கினார்.<br><br>**(1Cor 15:4 [KJV])**<br>And that he was buried, and that he rose again the third day according to the scriptures: |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | அடக்கம்பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து,<br><br>**(1Pet 3:18 [KJV])**<br>For Christ also hath once suffered for sins, the just for the unjust, that he might bring us to God, being put to death in the flesh, but quickened by the Spirit:<br>ஏனெனில், கிறிஸ்துவும் நம்மைத் தேவனிடத்தில் சேர்க்கும்படி அநீதியுள்ளவர்களுக்குப் பதிலாக நீதியுள்ளவராய்ப் பாவங்களினிமித்தம் ஒருதரம் பாடுபட்டார்; அவர் மாம்சத்திலே கொலையுண்டு, ஆவியிலே உயிர்ப்பிக்கப்பட்டார்.<br><br>**(Col 2:12 [KJV])**<br>Buried with him in baptism, wherein also ye are risen with *him* through the faith of the operation of God, who hath raised him from the dead.<br>ஞானஸ்நானத்திலே அவரோடேகூட |

| | கடவுள் வாழ்த்து / The Praise of God குறள் 1-10 | The Holy Bible Verses பரிசுத்த வேதாகமம் (திருவசனம் ) |
|---|---|---|
| | | அடக்கம்பண்ணப்பட்டவர்களாகவும், அதிலே அவரை மரித்தோரிலிருந்தெழுப்பின தேவனுடைய செயலின்மேலுள்ள விசுவாசத்தினாலே அவரோடேகூட எழுந்தவர்களாகவும் இருக்கிறீர்கள்.<br><br>**(Rom 8:11 [KJV])**<br>But if the Spirit of him that raised up Jesus from the dead dwell in you, he that raised up Christ from the dead shall also quicken your mortal bodies by his Spirit that dwelleth in you.<br>அன்றியும் இயேசுவை மரித்தோரிலிருந்து எழுப்பினவருடைய ஆவி உங்களில் வாசமாயிருந்தால், கிறிஸ்துவை மரித்தோரிலிருந்து எழுப்பினவர் உங்களில் வாசமாயிருக்கிற தம்முடைய ஆவியினாலே சாவுக்கேதுவான உங்கள் சரீரங்களையும் உயிர்ப்பிப்பார். |